# இயலிசை

தனி பிரதி
ஆண்டு சந்தா
அரையாண்டு சந்தா

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் ;
K P இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம். சென்னை - 24

மலர் 3 | 15 4- 84 | இசைக்கலை தமிழ் மாதமிருமுறை | சித்திரை இதழ் | இதழ் 1


## பொள்ளாச்சியார் நடத்திய இயலிசைக் கலைவிழா!



பல விழாக்களுடன் சென்ற 5 ஆண்டுகளாக இசை விழாவினையும் நடத்திவரும் இராமலிங்கர் பணி மன்றம் இவ்வாண்டு சென்னை அண்ணாசாலையில் உள்ள இராணி சீதை மன்றத்தில் ஏப்ரல் 1 முதல் 8 வரை இசைக்கலை விழாவினை நடத்தியது. இந்த ஆறும் ஆண்டு விழாவினை ராசா சர் அண்ணாமலை செட்டியார் அறக்கட்டளையும் இணைந்து நடத்தியது விழாவை மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் தொடங்கிவைத்தார்! கலைத் துறை அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் தலைமையுரை ஆற்றினார். இசைமேதை டாக்டர் S இராமநாதன் அவர்களுக்கு 'இசைக்கலைச் செல்வர்' என்ற விருது வழங்கப்பட்டது.

விழா நிகழ்ச்சிகளில் மாண்புமிகு க. இராசாராம். அமைச்சர் மாண்புமிகு சே. ஏ. கிருஷ்ணசாமி, Dr. சி. ஆ. பெ. விசுவநாதம் உயர்நிதி மன்ற நடுவர்கள், மற்றும் பலர் கலந்து சிறப்புரை ஆற்றினர். தினசரி காலையில் நா. கிரிதாரி பிரசாத் வீணை வகுப்பு நடைபெற்றபின் இசைக்கலை ஆய்வரங்கம் நடைபெற்றது. பல இசையாராய்ச்சியாளர்கள் கலந்து கொண்டனர். மறைந்த குடந்தை ப. சுந்தரேசனார் சீடர் திரு மா. வைத்தியலிங்கம் எட்டு நாட்களிலும் பழந்தமிழிசை பற்றி உரைகள் ஆற்றினார்.

தினசரி தமிழிசையரங்கங்களும் நடைபெற்றன. அவைகளில் திருமதி மணி கிருஷ்ணசாமி, திருமதி S. இராசேஸ்வரி, T. S. தண்டபாணி தேசிகர், திருப்பாம்புரம் சண்முகசுந்தரம், செல்வி பிரமிளா ஆகியோர் பாடினார்கள்.

சென்ற ஆண்டு நடைபெற்ற இவ்விழாவினைப் பற்றி இயலிசையில் செய்தி வெளிவந்த போது விழாவில் இசை நிகழ்ச்சிகள் இன்னும் சேர்க்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது நினைவிருக்கும். இவ்வாண்டு நிறைய இசை நிகழ்ச்சிகள் சேர்க்கப்பட்டு உமா தண்டாயுதபாணி. Dr. பத்மா சுப்ரமணியம் இவர்களின் பாரதியின் பாடல்கள் நாட்டிய நாடகமும் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது கண்டு இயலிசை தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றது. எனினும் மேலும் சில யோசனைகள் தெரிவிக்கின்றோம் இராமலிங்கர் பணி மன்ற நிர்வாகிகள் நல்ல முறையில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

காலையோடு இயலை பேச்சை-நிறுத்திக் கொண்டு மாலை முழுதும் இசையரங்கமாக இருக்க வேண்டும். ஆரம்பத்திலாவது நாதசுரம் ஒன்று இருக்க வேண்டாமா விழா மேளம் கட்ட வேண்டாமா? ஏன் இசைக்கலைஞர்கள் கூட்டத்தை விழாவில் அதிகம் காணோம்? பொள்ளாச்சியார் நா. மகாலிங்கம்செய்யும் நல்ல தொண்டுக்கு கலைஞர்கள் ஆதரவு தரவேண்டும். என்பது இயலிசையின் வேண்டுகோள்.

## பழநி பங்குனி உத்திர விழா

### பாங்கான இசை நிகழ்ச்சிகள் நடந்தன!

வருடந்தோறும் பங்குனி உத்திரத்தில் பழநி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோவிலில் பெருவிழா நடைபெறும், அவ்விழாவில் தமிழகமெங்கிலுமுள்ள நல்ல இசைக் கலைஞர்களை அழைத்து தினசரி இசை நிகழ்ச்சிகள் நடத்துவர். அதன்படி இவ்வாண்டு உத்திர இசை நிகழ்ச்சிகள் 11-3-84 முதல் 20-3-84 வரை குடமுழுக்கு நினைவரங்கில் நடைபெற்றன,

இவ்வாண்டு கணக்கன்பட்டி கே. சச்சிதானந்தம், பழனி S தங்கையா, கோவை நிர்மலா, கிருஷ்ணன், B R இராஜகோபாலன் தாராபுரம் D சுந்தரராஜன், AKC நடராஜன் கிளாரனட், ரகுமாயி ராமன் - மெல்லிசை குன்னக்குடி பாலா, திருக்கோயிலூர் சகோதரிகள், Dr சீர்காழி கோவிந்தராசன், திருவிழா R ஜெயசங்கர் நாதசுரம், சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம் சென்னை G முத்துராஜா ஆகியோரின் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஏராளமான ரசிகர்கள் தினசரி வந்து ரசித்தனர்.

## கலைஞர்களே! கலை ரசிகர்களே!

வணக்கம். உங்களது ஆதரவினால்-ஆசியால். இந்த இதழோடு இயலிசைக்கு இரண்டாண்டு முடிவுற்று மூன்றாவது ஆண்டு துவங்குகின்றது. சென்ற பங்குனி மாத இதழ் துணையாசிரியர் உடல் நலக் குறைவு காரணத்தாலும் எனது இசை நிகழ்ச்சிகள் காரணமாகவும் வெளிவரவில்லை. மன்னிக்கவும். இந்த இதழ் அதிகப் பக்கங்களுடன் சித்திரைச் சிறப்பிதழாக வெளி வந்துள்ளது.

கடந்த இரண்டு ஆண்டுகளாக இதழ் ஆரம்பித்த குறிக்கோளோடு நடத்துவதில் எத்தனையோ சிரமங்கள், பொருளாதார பிரச்சனைகள் ஏற்பட்டன எனினும் கூட்டிக் கழித்து பார்க்கும் போது விலை மதிப்பில்லாத வெற்றியே இயலிசைக்குகிடைத்துள்ளது. இந்த இரண்டு ஆண்டுகளில் எத்தனையோ கலைஞர்கள் ரசிகர்கள் இயலிசையால் நேரடி பயனும் அடைத்துள்ளனர். இன்னும் உங்கள் முழு ஆதரவு இயலிசைக்குக் கிடைத்துவிட்டால 'இயலிசை' தொண்டு மேலும் சிறக்கும்.

சந்தா சமீபத்தில் செலுத்தாதவர்கள் உடனே சந்தா அனுப்பி வைக்கவும். கலை உலகச் செய்திகளையும் அனுப்பி வைக்கவும்.

நிற்க-விரைவில் இயலிசை ரசிகர்கள் (வாசகர்கள்) வட்டம் கூட்டம் ஒன்று சென்னையில் நடைபெற உள்ளது. அதன் விபரம் அடுத்த இதழில் வெளிவரும். இசை உலக-கலை உலக பிரச்சனைகள்-புது கலைஞர்களை வளர்க்க-வழிகள் அதில் பேசப்படும். அனைவரும் கலந்து கொள்ள வேண்டுகின்றோம்.

சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

சிறப்பாசிரியர்:

## தெய்வீக இசை நிகழ்ச்சி

சென்னையிலுள்ள 'நாகஸ்வராவளி' என்ற இசைச்சபை கடந்த 29-2-84 அன்று மேற்குமாம்பலம் அயோத்யா மண்டபத்தில் தமிழக அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராமவீரப்பன் அவர்கள் தலைமையில் புதுமையான நிகழ்ச்சி ஒன்று நடத்தினர், இந்நிகழ்ச்சியில் முதலில் இசை ஆராய்ச்சியாளர் B. M. சுந்தரம் 'ஆலயங்களுக்கான நாதசுர இசை மரபு' தலைப்பில் உரையாற்றினார். அதைத் தொடர்ந்து அவரது கட்டுரைக்கு விளக்கம் தரும் வகையில் நாதசுர நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் பெரியவர் சிதம்பரம் ராதா கிருஷ்ண பிள்ளை, ஆண்டாங்கோவில் செல்வரத்தினம் இவர்கள் நாதசுரமும், திருநாகேசுவரர் சுப்பிரமணியம் தவிலும் வாசித்தனர். திருமதி ஜெயா பாலாஜி நிகழ்ச்சிகளை வர்ணனை செய்தார்.

## 'சப்தஸ்வரா' மண்டபம் திறப்பு!

சென்னை மயிலை அருள் மிகு அப்பர்சாமி திருக்கோவிலில் 'சப்தஸ்வரா' என்று ஓர் கலை மண்டபத்தை கட்டியுள்ளனர். மயிலை ஸ்ரீ ராம பக்த ஜன சபையார். இதன் திறப்பு விழா கடந்த 21-3-84 அன்று சென்னை மோட்டார் பைனான்ஸ் கம்பெனிகள் தலைமை இயக்குநர் வி. பி. சிவன் நாயக் தலைமையில் நடைபெற்றது. சுவர்ம சுயராஜ்ய சங்க இயக்குநர் பி.வி.எஸ்.எஸ். மணி மண்டபத்தைத் திறந்து உரையாற்றினர் பின்னர் புலவர் சிதம்பரம் சாமிநாதன் சொற்பொழிவு நடைபெற்றது.

இயலிசை





ஓம் முருகா

# கந்தனருட்சங்கம்

அமைந்தகரை சென்னை-29

**மூன்றுவது ஆண்டு
சித்திரைக் கிருத்திகைப்
பெரு விழா திருப்போரூர்**

இடம்: செங்கைமாவட்டம் திருப்போரூர் அருள்மிகு கந்தசாமி திருக்கோயில் மண்டபம்

1-5-84 செவ்வாய்க்கிழமை பரணியன்று

மாலை 4 மணி : செங்கை V. ஏழுமலை குழுவினர் நாதசுரம்

5-30 திருமதி ஜெயலட்சுமி நரசிம்மன்
வேதவல்லி கண்ணன் குழுவினர் வீணை

7 மணி : உயர்நீதி மன்ற முன்னாள் நடுவர்
திரு N. கிருஷ்ணசாமி ரெட்டியார்
தலைமையில் திரு S. பிச்சை B. A. B. L
வாழ்த்துரை வழங்குவார்.

சிறப்புரை : திருக்குறளார் V. முனுசாமி
(பழங்கலை இயக்குநர், தமிழக அரசு)

இரவு 9 மணி : சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம்
குழுவினர் இன்னிசை

---

2-5-84 : புதன் கிழமை கிருத்திகையன்று

காலை 6-30 மணி: ஸ்ரீ சித்தாத்திரி விநாயகர் தமிழ் வேத
பாராயண சபை. மானம்பதி-திருப்புகழிசை

7-30 மணி : திருமுருக விசாக நம்பி குழுவினர்-பாம்பனடிகள் பாடல்

9-00 மணி: **சுருத்தாரங்கம்**

தலைப்பு : ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் அருளிய அலங்காரம்

தலைமை : ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள்

உரையாற்றுவோர்:
புலவர் சுப்பு-பெருமாள்
புலவர் இ. துரைசேகரன் M. A.
புலவர் M. K. அருணாசல குருக்கள் M. A.
பக்தமணி V. இராசேந்திரன்
திரு D. சிவக்குமார்.

### இசையரங்கம்

பகல் 1-30 திரு S. பாலசுப்ரமணியம்
திரு C. N. சம்பந்தம் குழுவினர்
2-30 திரு B. N. நாகராசன் ,,
3-30 திரு N. P. கிருஷ்ணன் ,,
4-30 செல்வி K. பத்மாவதி ,,
5-30 திருமதி பவானி அம்மையார்
செல்வியர் S. நர்மதா
S. சுமித்ரா B. Sc. ,,
7 மணி திரு B. J. மாதவன் ,,

### நடன அரங்கம்

8-30 மணி செல்வி M. கலைச்செல்வி M. மாதவி குழுவினர்

**ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள்**
ஆதீன பரம்பரை தர்மகர்த்தர்

**T. S மோகனரங்கம்**
தலைவர்

R ராஜு B. A., B. L.
செயல் அலுவலர்.

சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
செயலாளர்

திருள்மிகு கந்தசுவாமி திருக்கோவில்
திருப்போரூர்.

கந்தன் அருட்சங்கம்,
சென்னை 29.

---

திருக்கழுக் குன்றத்தில்

## திருஞானசம்பந்தர் இசைவிழா

தமிழகம் தொல் பழங்காலம் முதலே மொழி, கலை, சமயம் முதலிய பலதுறைகளிலும் ஈடு இணையற்ற முறையில் நுட்பமாக வளர்ந்துள்ளது. பழந்தமிழ்க் கொள்கை அடிப்படையில் சிவநெறியைப் பரப்பிய அருளாளர்களில் **திருஞானசம்பந்தர்** தலைமை நிலையுடையார். 1300 **ஆண்டுகட்கு முன்னர்** விளங்கிய அவர், ' கலைகளை வெறுத்து இயற்கைக்கு மாறான வாழ்க்கை முறைகளை வற்புறுத்திக் கடவுள் மறுப்புக் கொள்கையையும் பரப்பிய சமண பௌத்த சமயங்களைப் புறங்கண்டு செந்தமிழ்ச் சிவநெறி தழைக்க நாடு முழுவதும் உலவிப்பணிசெய்தவர் **நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்தவர். பழந்தமிழிசைப் பண்களில் ஏராளமான தேவாரப் பாடல்களை அருளிச் செய்தவர். அவரோடு** திருநாவுக்கரசரும், சுந்தரரும் மற்றும் வைணவ அருளாளர்களும் அருளியுள்ள **திருமுறைகள், திருநாலாயிரப் பாடல்களில் அடங்கியுள்ள பண்களால் காப்பாற்றப்பட்ட பழந்தமிழிசையே, பிற்காலத்தில் 'கர்நாடக இசை' என்ற பெயரால் வளர்க்கப் பட்டிருக்கிறது.** எனவே, தென்னாட்டு இசை மரபை தமிழிசையை-ஓம்புபவர்கள். **அருளிசைத் தலைவராகத் திருஞான சம்பந்தரைப் போற்றவேண்டும். திருக்கழுக் குன்றத்தில், சிவநெறித் தலைவர்களாக விளங்கும் நால்வர்க்குத் தனிக்கோயில் நால்வர் பேட்டை எனும் பகுதியில் இருக்கிறது.** அத்திருக் கோயில் திருமுன்னிலே பல தனிச்சிறப்புகளை உடையது. அங்கே, தேவார திருவாசக முறைகளை ஓதும் **ஓதுவாமூர்கள் அனைவரும் கூடித் திருஞானசம்பந்தர் பெயரால் இசை விழாவை நடத்துதல் வேண்டும்** என்பது குருபழநி **ஆதீனம், திருக்குறள் பீடம் முதற்குரவர்** சிவத்திரு அழகரடிகளின் விருப்பம். அதன் படித் **திருஞானசம்பந்தர் இசை விழாவைத்** திருக்கழுக் குன்றத்தில் **இசைப் பேரரசி, கலைமாமணி, டாக்டர் சேலம், ஜெயலட்சுமி அம்மையார் அவர்கள்** பொறுப்பேற்றுத் தாம் நடத்தும் **இசைபயில் பண்பாட்டுக் கழகத்தின்** சார்பில் 1972 **ஆம் ஆண்டிலிருந்து நடத்தி வருகிறார்கள்.** அவர்கட்குத் துணையாகக் **குருபழநி ஆதீனமும், அப்பர் தொண்டர் அணியும்** இருந்து வருகின்றன. சில ஆண்டுகளாகத் தமிழக அரசின் அறநிலையத் துறையின் ஆதரவும் இவ்விழாவிற்குக்கிடைத்து வருகிறது.

இவ்வகையில் இந்த ஆண்டும் வருகிற வைகாசி மாதம் திருஞானசம்பந்தரின் **மூலத் திருநாளை** யொட்டி 1984 **ஜூன் 15 16,17 வெள்ளி, சனி, ஞாயிறு நாட்களில்** திருஞானசம்பந்தருக்கு ஆராதனையும் திருவீதி விழாவும் தக்க பெரியோர்கள், அமைச்சர்கள், அலுவலர்கள் உள்ளிட்ட அறிஞர்களின் உரைகளும், ஓதுவாமார்கள் இசைக் கலைஞர்களின் இசை நிகழ்ச்சிகளுமாக விழா சிறப்புற நடைபெற இருக்கிறது.

---

நாட்டிய மேதை

## பாலசரசுவதிக்கு அஞ்சலி கூட்டம்

**பெரியார் நூலக வாசகர்கள் நடத்தினர்**

கடந்த 15-3-84 அன்று சென்னை பெரியார் திடலில் பெரியார் நூலக வாசகர் வட்டம் சார்பில் மறைந்த நாட்டியக் கலையரசி T. பாலசரசுவதிக்கு நினைவுக்கூட்டம் நடந்தது. மயிலம் வச்சிரவேல் முதலியார் தலைமை வகித்தார். பால சரசுவதி' எவ்வாறு பதங்களுக்கு அற்புதமாக நடனமாடுவார். என்பதைத் தலைவர் பாடிக் காட்டி விவரித்தார். பாலசரசுவதியின் சகோதரர் தமிழிசைச் சங்கச் செயலர் T.சங்கரன் மறைந்த தன் தங்கையைப் பற்றிய சில அரிய செய்திகளைச் சொன்னார். இசை பாசிரியர் வி. சோமசுந்தரம் தன் குருநாதர் M. M. தண்டபாணி தேசிகர் எவ்வாறு பாலசரசுவதி அவர்களின் கலையை ரசித்தார். பாராட்டினார் என விவரித்தார்.

முகவை இராசமாணிக்கம் இசையும் நாட்டியமும் எவ்வாறு தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் பகுத்தறிவையும் விட்டு அகன்று போகின்றன என்பதை விளக்கி அதற்கு என்ன செய்யவேண்டும் என்று கூறினார்,

எழுத்தாளர் ஊ. செயராமன் பேசுபொழுது பெரியார் ஈ. வெ. ராவைச் சேர்ந்த இடத்தில் கலைஞர்களுக்கும் கலைகளுக்கும் இடம் உண்டாஎன்று சிலர் நினைக்கின்றார்கள். அது தவறு. கலைகள் மனிதனை அறிவில் மேம்பட்டவனாக ஆக்கவேண்டும், சமுதாய வளர்ச்சிக்கு பயன்படவேண்டும், வெறும் பக்திக்கு மட்டும்— பொழுது போக்குக்கு மட்டும் பயன்படக்கூடாது என்பதுதான் அய்யா கருத்து என்றுஉரைத்தார. மா. சண்முகன் வரவேற்புரையும் இசையாராய்ச்சியாளர் ப. தண்டபாணி நன்றியுரையும் ஆற்றினர்.

---

பம்பாயிலும் தமிழர்கள் பால சரசுவதிக்கு அஞ்சலிக் கூட்டம் நடத்தினர், அதில் ஸ்ரீராஜராஜேசுவரி பரத நாட்டிய கலா மந்திர் நடன ஆசிரியர்கள் கலந்து சிறப்பித்தனர்.

விழுப்புரம் அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி பாமாலை

## தூதுவன் அனுமன்

எடுப்பு

தூதுவன் அனுமன் தொண்டு புரிந்தான்
தூயராமன் அதனைக்கண்டு மகிழ்ந்தான்
(தூதுவன்)

தொடுப்பு

ஓதும் நல் நாமம் ராமநாமம் என்றுமே
உலகிற்கு அதனால் க்ஷேமம் க்ஷேமம் என்றே
(தூதுவன்)

முடிப்பு

1. இராம நாமம் அதனால் கடலை கடந்தான்
இராவணன் இடத்திலும் மிக உயர்ந்தான்
தராதலமெல்லாம் போற்றிடவே-தன்
தாபம் எல்லாம் இராம பணியே என்றான்
(தூதுவன்)

2. அனுமனை சீதையன்னை கண்டதனாலே
அவள் கண்ட இன்பம் கடல் போலே
புனித ராகவனின் பலமாகி படையாகி
புவிமேலே பெற்றான் போற்றிடும் புகழை
(தூதுவன்)

—'கவியரசு' டாக்டர் பழநி-இளங்கம்பன்

## அனுமனை நினை மனமே!

தகை

அனுமனை நினை மனமே-அவனை
அனுதினம் துதி மனமே.....நீ (அனுமனை)

இடை

அஞ்சனை குமாரனை அறிவினில் முத்தோனை
வெந்திறல் வீரனை வாயுவின் புதல்வனை (அனுமனை)

கடை

1. இலங்கையை எரியூட்டி இலக்குவனுயிர்காத்து
நிலமகள் உளமகிழ கணையாழி தந்து
அருமறை நாயகன் நினைவினில் ஓங்கிய
திருமுடி புனைகையில் அரியணை தாங்கிய (அனுமனை)

2. நாமக்கல் அனுமன் நன்மைகள் செய்வான்
நமனையும் வெல்லும் ஆற்றலும் தருவான்
சுசிந்திர மதிலே கய உருக் காட்டுவான்
சோளிங்கர் மலையில் யோகத்தி லிருப்பான் (அனுமனை

3. விழுப்புரம் அனுமன் வினைகளைத் தீர்ப்பான்
விருப்பமே வாழ்வினில் விரைந்திடச் செய்வான்
அஷ்ட சித்தியும் நவநிதியும் அளிப்பான்
இஷ்ட தெய்வமாய் இருந்தே களிப்பான் (அனுமனை)

—கவிஞர் இரா. சந்தானகிருஷ்ணன்

## ஆனந்தம் தந்த அநுமன்

இராகம் : கௌளை தாளம் : ரூபகம்

இசை

இராம பக்தா சரணம்
இராம சித்தா எனவே
அனுதினம் ஜெபமிடும் (இராம)

அசை

வாயு புத்ரனே வானவ தூதனே
வந்தருள் புரிவாய் வானவ ரூபனே (இராம)

ஓசை

ஆழ்கடல் தாண்டி இலங்கைக்கு ஏகி
அரக்கரின் ஆணவத்தை அழித்து நின்றே
அண்ணலின் மோதிரம் அம்மைக்கு அளித்தே
ஆனந்தம் தந்தே அற்புதம் செய்த (இராம)

'இசைச்செல்வன்'
சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம்

## வேண்டிய வரம் அளிக்கும் விழுப்புரத்து நாயகன்!

பல்லவி

அஞ்சன வண்ணன்ராமன்
அருமைத் திருத்தோழா!
அழகனுக்கு உனைவிடவும்
அமையும் நட்பில் இனியர் ஆளா? (அஞ்சன)

அனுபல்லவி

நெஞ்சில்ஐயன் தன்னை வைத்தாய்!
நேர்த்திக் கடன் முடித்தாய்!
மஞ்சமும் சுமந்து நின்ற
மாருதியும் தெய்வம் அன்றோ? (அஞ்சன)

சரணம்

இலங்கை அரசன் எதிர்
இருந்து நலம் உரைத்தவனே!
நலங்கள் பல பெற்றமைந்த
நகரைத்தீயால் மறைத்தவனே!
வலங்களையே தாங்கிவரும்
வள்ளலே ஆஞ்சநேயா!
நிலங்கடந்து ஜானகியை
நேரில் கண்ட தூதரசே! (அஞ்சன)

'சொல்லின் செல்வன்' என்ற
சொல்லுக்கே இலக்கணமே!
சோதனைக்குள் வாடிவரும்
சோதரரைக் காத்தவனே!
செல்லுறு பொழுதினிலே
சஞ்சீவி கொணர்ந்தவனே!
சென்னை நல்ல விழுப்புரத்துச்
செம்பொருளாய் வளர்ந்தவனே! (அஞ்சன)

கவிஞர், வான்மதிராமன்

விழுப்புரம் அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி பாமாலை

## ஜெயசீலா-ஜெகவீரா!

இராமநாமமே உன் வேதம்
இலங்காதகனமே உன் கீதம்
சேது பந்தன செயல்வீரா
வாயு மைந்தரே வந்தருள்வாய் (ஜெய)

2. அண்ட சராசரம் அனைத்தும் அடங்கிட
ஆட்சி கண்டிருந்த அந்த தசமுகனை
அதட்டிக் கேட்டதுன் குரலல்லவா
அதிரச் செய்தது உன் செயலல்லவா (ஜெய)

3. தந்திர அரக்கரை பந்து ஆடிய
மந்திர நேயா மாபெரும் வீரா
ஜெயக்கொடி சீலா ஜெயராமவீரா
வாயு மைந்தரே வந்தருள்வாய் (ஜெய)

4. இந்திர சித்தவன் தந்திரம் தூளென
மந்திர கிரியை சாந்தனின் ஏந்தி
மயங்கிய வீரரை முழுமைச்செய்த
மாவீர மாருதி உன் செயலல்லவா (ஜெய)

கவிஞர் முல்லைமணி

## சேவைக்கோர் அனுமன்

1. அஞ்சனையின் புதல்வனவன் வீரம் மிகுந்தவன்-கணை
ஆழிதந்தே ஜானகிக்கே அபயம்தந்தவன்
அஞ்சும்படி அரக்கர்களைக் கொன்று நின்றவன்-துயர்
ஆறும்படி இராமனுக்கே சேதி சொன்னவன்

2. எதிரெதிராம் குணங்களிலும் நெஞ்சில் நிற்பவன்-வீரம்
இருந்தபோதும் தொண்டுசெய்தே பேறுபெற்றவன்
முதிர்ந்த நல்ல அறிவிருந்தும் கர்வமற்றவன்-என்றும்
முகமலர்ச்சி யோடுஇராம சேவை கற்றவன்

3. பவழமுகம் வஜ்ரவுடல் நம்மைக் காக்குமே-அவன்
பக்கத்துணை வேண்டி நின்றால் நோய்கள் போக்குமே!
கவலைகளைத் தீர்க்குமந்த அனுமன் நாமமே-நம்மைக்
கருணையோடு நோக்குமவன் விழிகள் ரெண்டுமே

4. சீதையால் முத்துமாலை பரிசுபெற்றவன்-இராம
செபம் செய்தால் அருள்தரவே பக்கம் நிற்பவன்
காதுதந்தே இராமகாதை கேட்டு மகிழ்பவன்-அவனைக்
கரம்குவித்தே வரம்கேட்டால் இந்தா என்பவன்!!

கவிஞர் வேதம்

## பிரம்மச்சாரி பகவானே!

உயிர்வாழ்வுக்கு ஆதாரம் உபகாரம்
உயர்வாழ்வுக்(கு) ஆதாரம் உபகாரம்"
(உயிர்வாழ்வுக்கு)

ஒப்பற்ற மந்திரத்தை உலகிற்கு ஓதவந்தாய்
ஐந்தறிவுப் பிறப்பினிலே அவதரித்தும் அனுமான்நீ
தேவகுல ராமனவன் திருத்தொண்டன் ஆனாய்நீ!
வேதகுல ராமனவன் வாழ்வானாய் வலி வழியாய்!
(உயிர்வாழ்வுக்கு)

விழுப்புரத்தில் கோயில் கொண்ட வரமிக்க அனுமானே
வீரதீர சரித்திரத்தில் ஒப்பில்லாத அனுமானே!
சித்திரையில் லட்சதீபச் சீர்பெருக்கும் பெருமானே!
இத்தரையில் இணையில்லாத பிரம்மச்சாரி பகவானே!
(உயிர்வாழ்வுக்கு)

காற்றுமைந்தன் புகழ்வளர்க்கக் கனகசபை தொண்டாற்றப்
போற்றுகவி சாத்துகின்றேன்! புரிந்தேற்பாய் பக்தரிவர்
சாற்றுவடை மாலையாகச் சந்தமுடை இயலிசையை
நாட்டுநலம் தேடியுனைச் சரணடைந்தோம் காத்திடுவாய்!
(உயிர்வாழ்வுக்கு)

(வலி: காற்று)

கவிஞர்: அருவிமைந்தன்

## வெற்றித் திருமகனே! வருக

முதல்

அனுமனுக்கோர் பாமாலை சூடிக் களிப்போம்-அந்த
ஆனந்த வெள்ளத்திலே மூழ்கிக் குளிப்போம்.
(அனுமனுக்கு)

வழி

அனுமனென்று சொன்னாலே அளவற்ற வீரம்! அந்த
அளவற்ற வீரத்திலும் அன்பு பெருக்கெடுக்கும்!
(அனுமனுக்கு)

முற்று

வைத்தகண் வாங்காவொண்ணா வடிவழகன் இராமனுக்கும்
மைத்தடங் கண்ணினாள் மாதேவி சீதைக்கும்
அளவற்ற பணிவிடைகள் அன்புடனே தான்செய்து
உளம்மகிழ்ந்த உத்தமனே, உனதருளை வேண்டுகின்றேன்

மோகம் தவிர்த்தாலும் மூண்டதொரு பெருங்கனலாய்
வேகம் நிறைந்தவனே! வெற்றித் திருமகனே!
வாழ்க்கைப் பெருங்கடலில் வந்து அலைமோதிச்
சூழ்கின்ற இடர்நீக்கி சுகம்தரவே வருக!

கவிஞர்: கு. சண்முகசுந்தரன்

ந. இராமநாதன், 18, 40வது பிரதான சாலை, இராசா அண்ணாமலைபுரம், சென்னை-28





TN/MS (S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thiruuavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani Madras-26. Published / Edited by M. Lakshmi, 57 South Sivan Koil Street, Kodambakkam, MADRAS-600 024.

# ஆடலரசி அபிராமி

## 14. தியாகப்ரம்மத்தின் தீர்ப்பு

கலைத்துறையிலோ விஞ்ஞானத்திலோ யாரேனும் கண்டு பிடிக்கும் புதிய கருத்தை உடனே உலகம் ஏற்றுக் கொள்ளும் என்று எண்ண முடியாது. ஏற்றுக் கொள்ளாமலே இருந்தும் விடலாம். இசைக்கலையும் இதற்கு விதிவிலக்கல்ல. கி. பி. 1638-ல் தஞ்சாவூர் வெங்கடமகியால் சதுர்த்தண்டிப் பிரகாசிகை என்ற நூலில் அறிமுகப்படுத்தப்பட்ட 72 மேளகர்த்தா ராக ஏற்பாட்டினை உடனே இசை உலகம் ஏற்றுக் கொள்ளவில்லை. எதிர்ப்புகளும் இருந்தன. நூறு வருடங்கள் கழித்தும் அது ஏற்றுக் கொள்ளப்படாமல் இருந்திருக்கலாம். எனவே 18ம் நூற்றாண்டில் தோன்றிய தியாகராஜர் என்ற தியாகப்பிரம்மம் அந்த புது கருத்தினைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருந்திருக்கலாம்.

தியாகப் பிரம்மம் பரமசாதுவாக வாழ்ந்தவர். அவர் எந்த விதமான சச்சரவுகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள விரும்பவில்லை. இராமபிரான் சந்நிதியைத்தவிர வேறு எதையும் விரும்பவில்லை. இராச சபை அழைப்பையே வேண்டாம் என்றவர். அதற்கு மூல காரணம் அன்று ராச சபையில் அவ்வளவு பிரச்சினைகள் இருந்தன. எனவே இந்த 32-72 இராக சர்ச்சையில் தன்னையும் தனது படைப்புகளையும் ஈடுபடுத்த அவர் விரும்பாமல் இருந்திருக்கலாம்.

தியாகப் பிரம்மம் திருவருள் கூட்டுடன்தான் கீர்த்தனங்கள் செய்தார் என இசைப் பெரியார்கள் கருதுகின்றனர். அவரது கீர்த்தனைகளைப் பார்க்கும்பொழுது நாமும் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டியுள்ளது. ஒருவேளை 72 ராக அமைப்பிலுள்ள புது 40 ராகங்களில் கீர்த்தனங்களை பாட அவருக்கு 'உத்தரவு' கிடைக்காமலும் இருந்திருக்கலாம். அவர் மனதிலேயே ஏதேனும் கிலேசம் அச்சம் உண்டாகி புது ஏற்பாட்டினை ஏற்றுக் கொள்ளாமல் இருந்திருக்கலாம்.

எனினும் அவர் காலத்திலும் பின்னரும் வாழ்ந்த இசைப் பெரியார்கள் அந்த விவாதி 40 இராகங்களில் கீர்த்தனங்களைப் பாடியுள்ளனர். ஆனால் இதர சம்பூர்ண தாய் இராகங்களில் பாடப்பெற்ற கீர்த்தனங்கள் பிரபலமாக உள்ளது போல் சரளமாக சங்கீதக்காரர்களால் கையாளப்படுவது போல் அவைகள் பயன்படவில்லை என்பது இசை உலகம் அறியும் உண்மை.

இவ்வாறு ஒரு சிறு விளக்கத்தைத் திருவையாறு இராசகோபால் பாகவதர் தனது பரம சீடன் சாமி நாதனுக்கு சொல்லி அவனது இடக்கான கேள்விக்கு பதில் அளித்தார். அடுத்தும் அந்த பொல்லாத சீடன் என்ன கேள்வி கேட்பான் என்று அவருக்குத் தெரியும். எனவேதான் முந்திக் கொண்டார்.

''சுவாமிநாதா அடுத்து உனக்கு என்ன சந்தேகம் வந்துள்ளது என்பதனை யான் அறிவேன். தியாகபிரம்மம் பாடாத 40 விவாதி ராகங்களை நாம் பாடலாமா என்று எண்ணுகிறாயா என்று கேட்டார்.

சுவாமிநாதனுக்கு உண்மையில் அந்த சந்தேகம் இருந்தது. 'ஆம்' என்று பயபக்தியுடன் தலை ஆட்டினான். பாகவதர் சிரித்துக் கொண்டார். ஒருமுறை எழுந்து சென்று தாம்பூல எச்சிலை வரப்பு ஓடையில் துப்பிவிட்டு வந்து உட்கார்ந்தார்.

''தியாகப் பிரம்மத்தின் கீர்த்தனங்களை மட்டுமா நாம் பாடுகின்றோம் மற்ற பெரியோர்களின் கீர்த்தனங்களையும் பாடுகின்றோம் அல்லவா. அவர்கள் பாடிய 40 விவாதி ராக கீர்த்



தனங்களையும் பாடுவோம். 32 மேள கர்த்தா ராகங்களில் பிறக்கும் சில சேய்ராகங்களிலும் ஒரே சுரத்தின் இரண்டு பிரிவுகளும் ஒலிக்கவில்லையா. நீலாம்பரி இராகத்தில் இரண்டு நிஷாதங்களும் வரவில்லையா அவ்வாறு இதனையும் ஓர் ஜன்ய ராகமாக எடுத்துக் கொண்டு பாடுவோம். இசைக்கலையில் இதனை ஒரு புதுக் கருத்தாக(Advanced study) எடுத்துக் கொண்டு சில நேரங்களில் கையாளலாம் தவறில்லை ஆனால் இதனை அனைவரும் கட்டாயம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சிலர் சொல்வதனையும் அதற்கு ஆதாரவாக தியாகப் பிரம்மத்தின் மாசற்ற கீர்த்தனங்களைத் திருத்துவதனையும் யான் ஏற்றுக் கொள்ளவில்லை' என்றார்.

சுவாமிநாதனுக்கு ஜீரணமாகாமல் இருந்த உணவு எல்லாம் ஜீரணமானது.

இந்த நேரத்தில் நில ஊழியன்-பண்ணையாள் ஒருவன் அங்கு வந்து பாகவதருக்கு 'வணக்கம்' என்றான். பாகவதரைத்தேடி இன்னொரு பாகவதர் வந்திருப்பதாகத் தெரிவித்தான். பாகவதர் பாடம் நடத்தும் பொழுது சில பெரிய மனிதர்கள்-கலைஞர்கள் வந்து அமைதியாக அமர்ந்து குரு சீடர்கள் பாட்டினைக்கேட்டு செல்வதுண்டு. அந்த வகையில் யாரோ வந்திருப்பதாக நினைத்துக் கொண்டு பண்ணையாளிடம் வந்திருந்த பாகவதரை அழைத்து வரச் சொன்னார் திருவையாறு பாகவதர்.

வந்தவர் புதியவரல்ல. தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவர்தசன். தனக்குரிய சகல பந்தாவோடு வந்திருந்தார். ராசகோபால் பாகவதருக்கு 'வணக்கம்' செலுத்திவிட்டு அந்த வெட்ட வெளி கலைக்கூடத்தினை சுற்றிப் பார்த்தார். அவரைக் கண்டதும் ராசகோபால் பாகவதர் மகிழ்வுற்று ''தஞ்சாவூர் பாகவதரா... வாருமய்யா' என்று சொல்லி வரவேற்றார்.

ராசகோபால் பாகவதர் ஓர் கிணற்றுத் தவளை, எளிய வாழ்க்கையில் வாழ்ந்து எங்கும் அநாவசியமாகச் செல்லாதவர், பஞ்சாட்சர பாகவதரோ ஊரில் தங்கவே மாட்டார். எங்காவது சென்று எதாவது செய்து கொண்டிருப்பார். ஒரு ஊருக்கு நிகழ்ச்சிக்கு சென்றால், நிகழ்ச்சிக்கு பின் நேரே தஞ்சாவூர் திரும்பி வந்து விடமாட்டார். வழியில் உள்ள பழக்கமான ஊர்களுக்கு சென்று பெரிய மனிதர்களை, நண்பர்களை. சீடர்களைக் கண்டு சென்றால்தான் அவருக்கு திருப்தி. அவ்வாறு செல்லும பொழுது வேறு வாய்ப்புகளும் கிடைப்பதுண்டு. சிலசமயம் திடீர் நிகழ்ச்சிகளும் வருவதுண்டு.

கும்பகோணத்திலிருந்து தஞ்சாவூருக்கு அய்யப்பேட்டை, பாபநாசம் வழிதான் நேர்வழி. திருவையாறு வழி சுற்றுதான். என்றாலும் திருவையாறு வந்து ஐயாறப்பனை தரிசித்து நண்பர்களைப் பார்த்து செல்வதில் பஞ்சாசர பாகவதருக்கு தனி மகிழ்ச்சி அக்காலத்தில் தஞ்சை மாவட்டத்தில் வாழ்ந்த கலைஞர்கள் அனைவரும் திருவையாறு தலத்திற்கு அடிக்கடி சென்று வந்தாலே ஞானம் வளரும் என்று எண்ணியதும் உண்டு. ராசகோபால் பாகவதருக்கு பஞ்சாட்சர பாகவதர் போன்றவர்கள் சொல்லித்தான் வெளியூர் கலை உலக சங்கதிகள் தெரிந்து கொள்ள வேண்டும். எனவே அவரை வரவேற்பதில் திருவையாறு பாகவதருக்கு தனி மகிழ்ச்சியும் இருந்தது.

அக்காலத்தில் ஒரு கலைஞன் வீட்டிற்கு மற்றொரு கலைஞன் செல்வது தங்குவது, ஒருவரையொருவர் உபசரிப்பது வழக்கமாக இருந்தது. அவ்வாறு தங்கும் பொழுது ஒரு கலைஞரே தனது பிள்ளைகளை வந்தவரிடம் சில பாடங்களை கற்றுக் கொள்ளச் செய்வதும் உண்டு. வசதியுள்ள கலைஞர்கள் வசதியற்ற கலைஞர்களுக்கு சன்மானம். தங்களுக்குக் கிடைத்த ஜரிகை துண்டுகளைக் கொடுத்து அனுப்புவதும் உண்டு.

தஞ்சாவூர் பாகவதருக்கு மரியாதை தெரிவிக்கும் வகையில் சீடர்கள் அனைவரும் எழுந்து நின்று அவரை வரவேற்றனர். அவர்களைக் கவனித்த பஞ்சாட்சர பாகவதர் சுவாமிநாதனைப் பார்த்து 'நம்ம ஊர் பிள்ளையும் வந்திருக்கானு' என்று சொல்லி திருவையாறு பாகவதரிடம் 'தம்பிக்கு இப்பவே தஞ்சாவூர்ல பேருதான்' என்று சொன்னார். அவர் சிரித்துக் கொண்டார். சுவாமிநாதனுக்கு தன் குருநாதர் எதிரில் தன்னைப் புகழ்ந்து பாகவதர் பேசியது பிடிக்கவில்லை. என்றாலும் ஒப்புக்கு சிரித்தான்.

பின்னர் பஞ்சாட்சர பாகவதர் தான் மாசி மகத்திற்கு கும்பகோணம் சென்றது பற்றி ராசகோபால் பாகவதரிடம் சொன்னார் அபிராமி அவள் சிம்ம நந்தனம் அரங்கேற்றம் பற்றி விவரித்தார். லய வ்வகாரங்களில் ராசகோபால் பாகவதர் அவ்வளவு பெரிய கலைஞர் இல்லை. எனவே அது என்ன தாளம் எப்படி கையாண்டார்கள் என்று விவரமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு அபிராமியைப்பற்றி பாகவதர் வர்ணித்த வார்த்தைகள் ஏறவில்லை. சுவாமிநாதனுக்கோ அபிராமியைப்பற்றி பாகவதர் சொன்ன ஒவ்வொரு வார்த்தைகளும் அவன் மனதில் பதிந்து இருந்தது. கலைத்தேவியைத்தவிர வேறு எந்தத் தேவியையும் காண விரும்பாத அவனுக்கு அபிராமி தேவியைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எழுந்தது.

(தொடரும்)

---

## கரூரில் காயத்ரி வீணை!

புதுவருட பிறப்பன்று கரூர் நாரத கான சபையில் வீணைக்கலைஞர் திருமதி E. காயத்ரி வீணைக் கச்சேரி சிறப்பாக நடைபெற்றது. தஞ்சாவூர் இராமதாசு மிருதங்கம் வாசித்தார். கரூரில் நல்ல இசை நிகழ்ச்சிகளை நடத்தி சமீபத்தில் அரசு பரிசும் பெற்ற சபை நாரத கான சபையாரும்.

---

## மறைந்த இசைக்கலைஞர் T. R. மகாலிங்கம் மகளின் கச்சேரி

---

## அனுமன் பள்ளி ரசிகர்கள் ரசித்தனர்

---

பெரியார் மாவட்டம் அனுமன் பள்ளியில் 20-4-84 அன்று ஸ்ரீ ராம நவமி விழா நடைபெற்றது. மறைந்த திரைப்பட நடிகர் பாடகர் டி. ஆர் மகாலிங்கம் மகள் செல்வி சாவித்திரி பி.எஸ் சி.அவர்களின் குழுவினர் இசை நிகழ்ச்சியை மாலையிலும், இரவு திருவீதி உலாவில் திருச்சேறை டி. வி. எஸ். சிவசுப்ரமணியம் நாதசுரம் நிகழ்ச்சியும் ஏற்பாடு செய்திருந்தனர் ஸ்ரீராம பக்த பஜனை கோஷ்டியார். நாதசுரத்திற்கு வலையபட்டி சுப்ரமணியம், கோவை பி. எஸ். ஆறுமுகம் கொங்கம்பட்டுவ வி. முருகையன் ஆகியோர் சிறப்புத்தவில் களை வாசித்தனர் செல்வி சாவித்திரியின் இசை நிகழ்ச்சியை கேட்டு அனுமன் பள்ளி ரசிகர்கள் மகிழ்ச்சியுற்றனர். செல்விக்கு 'இயலிசை'யின் வாழ்த்துக்கள்!

## சென்னையில் தீட்சதர் விழாக்கள்!

சென்னை இசைச் சபைகளான 'சரசுவதி' 'மாதங்கி' இவைகள் சார்பில் ஏப்ரல் 5, 6, 7 தேதிகளில் மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசுவாமி தீட்சதரின் 209வது வருட நினைவு விழா நடைபெற்றது. விழாவில் சங்கீத கலாநிதி T. M. தியாகராஜன், கலந்து சமீபத்தில சங்கீத நாடக அகடமி விருது பெற்ற D. K. ஜெயராமன் அவர்களுக்கு பாராட்டுரை வழங்கினர். பி. வி. ராமன், பி. வி. லட்சுமணன். டி. கே. ஜெயராமன், பம்பாய் சகோதரிகள் ஆகியோர் தீட்சதர் பாடல்களைப்பாடி இசை நிகழ்ச்சிகள் நடத்தினர். 'நாதஸ்வராளி' தலைவர் பாலசுப்ரமணிய சாஸ்திரிகள் தீட்சதர் கிருதிகளைப் பற்றி விளக்கங்கள் அளித்தார்.

மயிலை ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜம் சார்பில் 5-4-84 அன்று முத்துசுவாமி தீட்சதர் ஜெயந்தி பூஜை, நவக்ரஹ, நவாவர்ண கானம் நடைபெற்றது. இங்கு 16-4-84 அன்று நடைபெறும் 171-வது ஆண்டு மகாராஜா ஸ்வாதித் திருநாள் நினைவு விழாவில் திருமதி ஜெயா கிருஷ்ணன் பாடுகின்றார்.

## ஆஞ்சநேய சுவாமி பாமாலை!

வருடந்தோறும் சித்திரைத் திங்களில் விழுப்புரம் அருள்மிகு ஆஞ்சநேயர் திருக்கோவிலில் இலட்சதீபப் பெருவிழா நடத்துகின்றனர். ஏராள கலை நிகழ்ச்சி



களும் நடைபெறும் இவ்வருடம் இவ்விழா 9-4-84 முதல் 19-4-84 வரை நடைபெறுகின்றது. இயல், இசை, நடனம், நாடக நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இவ்வருடம் ஆலய பரம்பரை அறங்காவலர் வி கனகசபை அவர்கள் விருப்பப்படி ஆலய சிறப்புக் கலைஞர் சிதம்பரம் எஸ். மீனாட்சிசுந்தரம் அவர்கள் 'பாமாலை' புத்தகம் ஒன்று தயாரித்து அளித்தார். அதில் பல கவிஞர்கள் அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி மீது பாடல்கள் பாடியுள்ளார். பாடல்கள் இவ்விதழில் தனியே தரப்பட்டுள்ளன. 12-4-84 அன்று திருக்கோவிலில் இப்புத்தகத்தை வெளியிட்டனர்.

## வயலின் கலைஞர்களுக்கு பாராட்டு!

அரசவைக்கலைஞரும் கலைமாமணி விருது பெற்றவருமான வி. கோவிந்தசாமி நாயக்கர் 1000 வயலின் இசைக் கச்சேரி நடத்தி இருக்கிறார். அவருடைய பேரன் சிறுவன் சுரேஷ் 100 கச்சேரிகள் நடத்தி இருக்கிறார். இதற்காக அவர்கள் இருவருக்கும் சென்னை சைதாப்பேட்டை வி. ஜி. பி. சதுக்கத்தில் வி. ஜி. பி. சகோதரர்கள் சார்பில் பாராட்டு விழா நடந்தது. விழாவிற்கு வி. ஜி. பன்னீர்தாஸ் தலைமை தாங்கினார்

விழாவில் பாராட்டி பேசிய லண்டன் தொழில் அதிபர் ஜெகநாதன் சிறுவன் சுரேஷ் லண்டனில் ஒரு நிகழ்ச்சி நடத்த ஏற்பாடு செய்வேன் என்று கூறினார். முன்னதாக வி. ஜி. சந்தோசம் அனைவரையும் வரவேற்று பேசினார். முன்னாள் நகரசபை உறுப்பினர் டி. வி. தட்சிணாமூர்த்தி நன்றி கூறினார்.

### ஸ்ரீராமநவமி கலைநிகழ்ச்சிகள் தமிழகமெங்கும் நடைபெற்றன.

இவ்வாண்டு ராமர் பிறந்த ராமநவமி கலைநிகழ்ச்சிகள் ஏப்ரல் 10 முதல் 20 வரை தமிழகமெங்கும் பல திருக்கோவில்களிலும். சபைகளிலும் நடைபெற்றன. இந்த தேதிகளிலேயே புதுவருட பிறப்பு, சித்திரைப் பௌர்ணமியும் இவ்வருடம் வந்ததால் எங்கும் மிக சிறப்பான நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. சென்னையில் மாம்பலம் ராமசமாஜத்திலும், ஆழ்வார்ப்பேட்டை ஆஸ்திக சமாஜத்திலும் வழக்கம்போல் கர்நாடக இசைத்துறையில் உள்ள பெருங்



கலைஞர்கள் கச்சேரிகள் அனைத்தும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தினசரி ஏராள ரசிகர்களும் வந்து ரசித்து, கலைஞர்களை உற்சாக மூட்டினர். நிகழ்ச்சிகளில் கலைஞர்கள் தமிழ்ப்பாடல்களும் குறிப்பாக அருணாசலக் கவிராயர் இராமாயணப்பாடல்களும் பாடியது ரசிகர்கள் வரவேற்பைப் பெற்றது.

## கடிதங்கள்!

இம்முறை இயலிசை ஆடலரசி அபிராமி கதையில் மேளகர்த்தா இராகங்களைப்பற்றி விவரம் தந்தது மிகவும் பாராட்டத் தக்கது; நாவல் முடிந்ததும். செம்மையாகத் திருத்தி, ஒரு புத்தகமாகக் கொண்டு வந்துவிடக் கோருகிறேன்; அது தங்களுக்கு தவறாமல் புகழ் சேர்க்கும்.

—ஊ. ஜெயராமன். சென்னை-1

தியாகப்பிரம்மம் கீர்த்தனங்கள் பெயரில் ராகலட்சணங்களும் அதன் விளக்கமும் தந்திருப்பது மிகவும் பாராட்டுக்கு உரியவை.

—'கலைமாமணி' T. K. மகாலிங்கம் பிள்ளை, பம்பாய்

## ஷேக்மௌலானா சீடர்கள் நாதசுர இசைச்சுட்டி வெளியீடு!

நாதசுர மேதை ஷேக் சின்ன மவுலானா அவர்களின் சீடர்கள் ஷேக் மகபூப் சுபாணி, திருமதி காளிஷாபி மெஹபூப் தம்பதிகள் சேர்ந்து வாசித்துள்ள நாதசுர இசைச்சுட்டி சமீபத்தில் வெளி வந்து வரவேற்பு பெற்றுள்ளது. இவர்களுக்கு அரசவைக்கலைஞர் வலங்கைமான் ஷண்முகசுந்தரம் தவில் வாசித்துள்ளார். இசைச் சுட்டியில் மோகன வர்ணம்; சாயாதரங்கணி, அம்ருத வர்சனி முதலிய ராகங்கள் வாசித்துள்ளனர். மயிலை எக்கோ இசைத் தட்டு இசைச்சுட்டி நிறுவனம் தயாரித்து வெளியிட்டுள்ளது.

## சுவாதி திருநாள் சங்கீத உற்சவம்

பிரபல திரைப்பட பின்னணி பாடகர் K. J. யேசுதாஸ், G. தேவராஜன் இவர்கள் முயற்சியால் ஸ்ரீஸ்வாதி திருநாள் சங்கீத சபை சார்பில் ஏப்ரல் 17 முதல் 25 வரை மயிலை பாரதீய வித்ய பவன் அரங்கத்தில் சுவாதி திருநாள் சங்கீத உற்சம் என்று ஓர் இசை விழா நடத்துகின்றது. பல பிரபல இசைக் கலைஞர்கள் பாடுகின்றனா. விழா நிறைவு நாளில் 'ஸ்வாதித் திலகம்' விருதும் பண முடிப்பும் பெறுவோர்:

டாக்டர் எஸ். இராமநாதன் ரூ 3000

திருவள்ளுவர் சுப்ரமணியம், பிடில் ரூ 2000/-

குத்தாலம் விசுவநாத அய்யர் மிருதங்கம் ரூ 2000/-

பிடில் கலைஞர் பி. ஏ. சிதம்பரநாதன் நன்றியுரை ஆற்றுகிறார்.



## மங்கைநல்லூர் வள்ளலார் விழா

தஞ்சை மாவட்டம் மங்கை நல்லூரில் 19-3-84 அன்று டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதன் அவர்கள் தலைமையில் 51.வது ஆண்டு வள்ளலார் விழா நடைபெற்றது. அருட்பா இசைவாணர்கள் சிறுபுலியூர் P. கிருபா சமுத்திர சுவாமிகள், மயிலாடுதுறை K. இராமசாமி, கோட்டூர் அருள் ஜென்னுத பாகவதர். தில்லையாடி வே. சண்முக பாகவதர், மயிலாடுதுறை மு. மீனாட்சி ஆச்சி ஆகியோர் அருட்பா இசை வழங்கினர்கள், இரவு தேரழுந்தூர் திருமதிகள் மதுரம்-கமலா கச்சேரியும், மதுரை MPN சகோதரர்கள் நாதசுரக் கச்சேரியும். கவிஞர் சுப்பு ஆறுமுகம் குழுவினர் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியும் நடைபெற்றன. விழா ஏற்பாடுகளை மங்கை நல்லூர் சமரச சுத்த சன்மார்க்க சங்க செயலாளர் V. S. V. பாவாடைபிள்ளை அவர்கள் செய்திருந்தார்.